


# ஆரோவில்

## செய்திமடல்

கிளை - 27 | பிப்ரவரி - 2024 | இலை - 5

பிப்ரவரி 21

ஸ்ரீஅன்னை பிறந்த தினம்



# திருக்குறள்

**இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்.** (இன்னாசெய்யாமை 314)

தீமை புரிபவர்களைத் தண்டிக்க ஒரு வழிஉண்டு. அவர்கள் வெட்கமுறும்படி நன்மைபுரிவதே அந்தத் தண்டனை.

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

## இருபதுகளில் எனது எழுத்து

*மிகச்சரியாக பிப்ரவரி 21 ஆம் நாள் மாலையில் 1976 ஆம் ஆண்டு எனது உடலும், உயிரும் தமது ஆன்மிக இதயத்தின் செங்கதவுகளைத் திறந்து உள்ளே நுழைந்து ஆசுவாசித்துக்கொண்ட இடம் ஆரோவில். அப்பொழுதே எனது இரு கவிதை நூல்கள் வெளியிடப்பட்டிருந்தன. புதுயுகக் கவிஞர்கள் மத்தியில் எனது பெயர் அறிமுகமாகியிருந்தது. இன்று என்னுடன் பணிக்களங்களில் பயணிக்கும் அன்பினர் பலருக்கு அன்று நான் என்ன எழுதியிருந்தேன் என்று தெரியவில்லையே என்று ஆதங்கப்படுகிறார்கள். பழைய கவிதைத் தொகுப்புகளை எடுத்துப் படிக்க வாய்க்கவில்லை அல்லது நேரமில்லை அல்லது பக்குவப்படவில்லை என்று ஏதேனும் ஒரு சாக்குப்போக்கு முறுவலுடன் வந்து நிற்கிறது.*

*இன்றைய இளம்தோழமைக் கவிநெஞ்சங்களும் "நீங்கள் கவியம்மணியாகியது எப்படி?" என்று பாதாளக்கரண்டி போடுகின்றன. ஒருவாறாகத் தேர்ந்தெடுத்த எனது சில கவிதைகளை இம்மடலில் வாசிப்பு அனுபவம் பெருகட்டும் எனும் வாழ்த்துடன் மீள்பதிவு செய்கின்றேன். 1970களிலிருந்து 2000வரை வெளிவந்துள்ள கவிதைத் தொகுப்புகளிலிருந்து கிள்ளித் தருகிறேன்.*

*.!*



## அன்னையின் பிரார்த்தனை

அமைதி, அமைதி. புவிமுற்றும் அமைதி. எல்லாரும் சாதாரண உணர்விலிருந்து விடுபட்டு, லௌகீக பற்றுகள் நீங்கி நின் திவ்ய சாநித்யத்தின் போதம் பெற்று, நின் மிக உயரிய உணர்வுடன் ஒன்றி இவை எல்லாவற்றின் விளைவால் உண்டாகும். அமைதிப் பெருக்கை சுவைப்பார்களாக.

எம்மனே லௌகீகத் தேவைகள் பற்றிய கவலைகளிலிருந்தும் லௌகீக நோக்கிலிருந்தும் எங்களை விடுவி,நின் கண்கொண்டே அனைத்தையும் பார்க்கவும் நின் திருவுளச் சித்தத்தின்படியே நடக்கவும் அருள்வாய், எம்பெருமானே, நின் திவ்ய அன்பின் எரியும் சுடர்களாக எங்களை ஆக்கிவிடு. பணிவு, பக்தி இவற்றோடு என் இருப்பு முற்றும் தன்னை நின்னிடம் அர்ப்பணித்துக்கொள்கிறது. எம்மனே நின் தர்மம் நிறைவேற்றுக. அமைதி, அமைதி புவி முற்றும் அமைதி.!

ஸ்ரீ அன்னை

நெருஞ்சி - 1970
சுடுபூக்கள் - 1978
தீபாவளிப்பகல் - 1983
மறுபயணம் - 1998

### ஒன்றும் ஒன்றும்

ஒன்றும் ஒன்றும்
இரண்டென்று
அன்றொரு நாள் அரிச்சுவடி
ஒன்றும் ஒன்றும்
ஒன்றென்று
மணமேடைப்பேச்சு
ஒன்றும் ஒன்றும்
மூன்றென்று
தொட்டிலடிச்சிரிப்பு
ஒன்றை ஒன்று
வென்றுவிட வாளே இல்லை
ஒன்றை ஒன்று
மென்று தின்ன வாயே இல்லை
ஒன்றையொன்று ஒன்றாமல்
ஒருவழிப்பாதையிலே
ஓராயிரம் கோளங்கள்

ஒன்றும் ஒன்றும்
ஒன்றுமில்லை!. (நெருஞ்சி)

**எழினி**

அவள்தான் வெளியேற
அவளே தடையாகி
அவலத்துடிப்பு
மென்குரலில் வெளியழைப்பு
அவளுக்கோ அவலத்துடிப்பு.
கழுத்து முடிச்சு பற்றுக்கோடா?
தடையுத்தரவு
முள்வேலி
கம்பிக்கயிறு கட்டுமானம்.

பூச்சீலை நெளிகிறது
திரையாகி அலைகிறது
துருப்பிடித்த
சன்னலுக்குத் தெரியுமா
சீலையின் தவிப்பு? (நெருஞ்சி)

**சாஞ்சி**

தலையில்லாத புத்தர்
மூக்கிழந்த அரசர்
அழகிழந்த தேவதைகள் தேவதூதர்கள்
குவியலாய்க் கிடந்த மண்டபக் கைகள்
பாதிவரிசை நெடிய தூண்கள்
கலைகள் கலைந்த இதுவா சாஞ்சி?

‘‘புத்தம் சரணம் கச்சாமி‘‘
எங்கும் ஒலித்த
அசோகத் துறவின்
அருட்பெரும் கோயிலும் இதுவா?
மறத்தின் கொடுமை
அறத்தைத் தின்னமுடியாமல்
துப்பியிருந்த சின்னாபின்னங்கள்
காலச் செல்லரித்த கல்லடுக்குகள்.
அரசமரத்தில் மென்காற்று இணைந்தபோது
மஞ்சள்புல்லில் ஊர்ந்தபோது
வழுக்கைப் பிராகாரத்துள்
வழிபட்டு வந்தபோது
‘சாந்தி சாந்தி’ புத்த ராகம்
சங்கமித்திரைப் பாட்டாகச்
சுற்றிச் சூழ்ந்தது.
அசோகச் சக்கரம் நிற்காமல் சுற்றியது.
சாஞ்சியில் காலம் ஒன்று.

ஆங்கொரு அமெரிக்க ஹிப்பி
சொறிநாயைக் கொஞ்சினான்
மலையுச்சியில்
ஏழையொருவன்
தாகத்தீர்வுக்கு நீர் வார்த்தான்
புதிய புத்தகோயிலில்
இலங்கைக்கொடி நிமிர்ந்து பறந்தது
சாஞ்சியில் உலகம் ஒன்று.

ஒற்றை உலகின்
ஒற்றை மனிதனுக்குள்
நானும் கலந்து பேருருக் கொண்டேன்
சாஞ்சியில் இதயம் ஒன்று . (சுடுபூக்கள்)

**அணுகுண்டும் நாய்க்குடையும்**

பறக்கின்ற மணலலைகள்
சுவரெடுத்த
பாலைவன வெண்பரப்பில்
கன்னிமைக் கனவழித்து
குண்டுவெடிப்பு
கண்டுபிடிப்போ
புகை நாய்க்குடைகளும்
நச்சுப்படையொன்றும்.
மின்னல் மழைக்கால
ஈரநிலத்துக்காளான்
மெத்தெனும் அழகு.
பசிக்கும் உணவாகும்.
அணுஞானிகள்
இங்கே வந்தால் தேவலை
அப்புறம்
இந்தியக் குடைக்குள்ளே
ஒழுகாது. (சுடுபூக்கள்)

**வாயுள்ள ஜீவனும் வளைந்த முதுகெலும்பும்**

காலுக்குச்
செருப்புத்தான் கேட்டேன்
லாடமடிக்காதீர்கள்
(வலிக்கிறது சொல்வதற்கு மன்னியுங்கள்) (சுடுபூக்கள்)

**திரும்பு திரும்பு!**

மீனுக்கு வலைவிரிக்கும் கடல் மன்னன்
சமுதாயக் கண்ணிக்கு
இரையாகும் அயிரைமீன்.
மீனவத் தோழா!
நீ கடலில் போகும்போது



பார்வையைக் கரைமேல் வை
மேற்காற்றாத்தாள் அங்கேதான்
வயிறையும் மீனையும்
காயப்போடும்
அவளும் அங்கேதான்
மீன் கொத்த நின்றிருக்கும்
முதலாளியும் அங்கேதான்.
நம்பிக்கையை மூன்றாம் கையாய்
உயர்த்தி நிற்கும்
உன் சின்னமகன் கரையில்தான்
விரைவில் திரும்பு.

(தீபாவளிப்பகல்)

**அமார்ஸீ**

அமார்ஸியே!
உன் கரையில்
மாலை நேரத்துப் பொன் கதிராய்
நான் நிற்கும் இந்தப் பொழுது
நீ விரிவுரை செய்கிறாய் – அது
நீல மௌனம்.

காலங் காலமாய் இழந்தவற்றை
ஈடு செய்தேன்
கண் வழியே மனது
உல்லாசக் குருவியைக்
கூவி அழைக்கிறது
உன் விரிப்பில்
என்னை எனக்குப் பிடிக்கிறது.

(ஜெர்மனியிலிருந்து)

(தீபாவளிப்பகல்)

**பிறப்புகள்**

எங்கும் பிறப்பு
பதிது புதிதாய்
முடிவில்லா வண்ணங்களில்
வடிவங்கள் கூட்டங்கள்
எங்கும் பிறப்பு

குயிலின் கீதம் கிளையின் இருட்டில்
வயலில் மணிகள் புல்லின் தலையில்
சூரியக் கற்றை பூரண நிலவில்
பிறந்து
மறுபடி பிறந்து
முடிவில்லா வண்ணங்களில்
வடிவங்கள் கூட்டங்கள்
கலைஞன் கைகளில்
கற்பனைக் கலைகள்
பிறக்கும் பொழுதுகள்
ஓசையே இல்லாமல்
விழுதுகள் ஒருமைப்பட,
தெய்வங்கள் பிறக்கவே செய்கின்றன.
படைப்பவனைப் பிறப்பிக்கும்
உற்சாக மனிதனே
நீயே தாய் பிரம்மா.!

(தீபாவளிப்பகல்)

**ஆடை**

பிள்ளைக்குப் பெயர் சூட்டணும்
அவசரம் என்னத்துக்கு?
அதன் விழிப்பை
அதுவே பேசும்வரை
நிர்வாணமாய் இருக்கட்டுமே.

(மறுபயணம்)

எங்கும்வெளி
பெரிய வெளியில்
சிறிய வெளி என் வீடு
வீட்டிற்குள் என் உடம்பு
அங்கும் வெளிதான்.
வெளியில்
பரவச ஒளியின்
எல்லையில்லாத நாட்டியம்.

(மறுபயணம்)

*இந்நடப்பு நூற்றாண்டில் மேலும் ஒன்பது கவிதைத் தொகுப்புகள் என்பெயர் தாங்கி அச்சிடப்பட்டுள்ளன. பல்கலைக்கழகங்கள், தனிக்கல்லூரிகள், தமிழகப் பள்ளிநூல் வெளியீட்டுக் கழகம் மற்றும் பல ஆய்வுத்துறைகளில் இந்நூல்கள் கவனம் பெற்றுள்ளன என்னும் நற்செய்தி உங்களுக்கெல்லாம் மகிழ்ச்சி தருகிறது அல்லவா?*

*நேசித்து வாசித்து எம் கவிதைத் தமிழை அரவணைக்கும் நல்லுள்ளங்களுக்கு நன்றி.*



*மேலும் வளரும் நிறைவில்.*
இரா.மீனாட்சி

## நமது நூலகம்

திருமாலின் இராம பரசுராம அவதாரங்கள் (மரபுக்கவிதை)

சி.மணி.

மணிமேகலை பிரசுரம்.

2022 | ரூ. 1300/-

இலக்கணப்பயிற்சியுடன் சந்த நயத்துடன், தமிழ்மொழிச் செம்மையுடன், தூயபொருளுடன் பக்தி பூர்வமாக இக்காலத்தவர்க்கும் புரியும் வண்ணம் இக்காப்பியம் கம்பனின் அடிச்சுவடு ஒற்றி இயற்றப்பட்டுள்ளது. நல்ல தெய்வத்திருப்பணி. திரு. மணியின் அன்பு வேண்டுகோளினை ஏற்று வாசித்து 1240 பக்க நூலுக்கு அணிந்துரையும் அளித்து விட்டேன்.

– ஆசிரியர்.

## தமிழ்ப் பழமொழிகள்

### வே

1. வேண்டுமானால் பலா வேரிலிலும் காய்க்கும்
2. வேலி இல்லாத பயிருக்கு விளைச்சல் சேதாரம்
3. வேலியே பயிரை மேய்ந்தால் விளைவது எப்படி?
4. வேலிக்கு போட்ட முள்ளு காலுக்கு வெனையாச்சு
5. வேற்றூர் அரிசியும் விறகும் உண்டானால் சாத்தூருக்கு ஒப்பு இல்லை.
6. வேனில் காலத்துக்கு விசிறி ஆன காலத்துக்கு ஆச்சாவும் தேக்கும் வை
7. வேலி சாடும் பசுவுக்கு என்றைக்கும் கோல் கொண்டுதான் மரணம்
8. வேலி நிழல் ஆமோ வேற்று பேர் தாய் ஆமோ.

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

## ஸ்ரீஅரவிந்தர் – 150

### ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்

பரிணாமம்:
அனல்வாயு
நெருப்புக் குழம்பு
பாறை
கடல்
தாவரம்
விலங்கு
மனிதன்
இது பூமியின்
பரிணாம வளர்ச்சியின்
அறிவியல் கதை
இவ்வளர்ச்சியின்
உச்சத்தில் இருப்பதான
மனிதனின் நினைப்பு
பொய்
இந்த மனித விலங்கிற்கு
சமுதாயம்.மாட்டிவிட்ட
விலங்குகள் பல
இவை தளர்த்தப்பட்டு
தகர்க்கப்படவேண்டும்.
ஸ்ரீஅரவிந்தர் அருளிய
யோக சாதனையின்
யோக சாலையின்
வழியே போக
அடுத்தக்கட்ட நிலை வரும்.
இதன்மூலம்
இறைபொருளை
அடைந்து.
அதன்பயனாக
ஒளி, சக்தியை
புவிமீது பரப்பச் செய்தல்,
இனி
என்றும் எங்கும்
ஆனந்தம். பேரானந்தமே!.



(மேலும்மலரும்)

# மரக்காணம் கழுவெளி! பிரச்சினைகளும் தீர்வும்

மரக்காணம் பகுதியிலுள்ள கழுவெளி ஓர் இயற்கையான உப்புநீர் கழிமுகம் ஆகும். இது விழுப்புரம் மாவட்டம் வானூர் - மரக்காணம் பகுதியில் அமைந்துள்ளது. இங்கு நிலப்பகுதியிலிருந்து வெளியேறும் நீரும், கடல் நீரும் ஒன்று சேரும் இடமாக அமைந்துள்ளது. தமிழ்நாடு அரசின் பொதுப்பணித்துறை மூலம் 160 கோடியில் தடுப்பணை கட்டும் திட்டம் ஒன்று செயல்படுத்தப்பட்டு வருகிறது. தடுப்பு மூலம் கடல்நீர், நிலப்பகுதியில் உட்புகாதவாறு தடுக்கும் நோக்கில் செயல்படக்கூடியது இந்தத்திட்டம் நிறைவேற்றப்பட்டால், கரையோரப் பகுதிகளிலிருந்து வழிந்தோடும் மழைநீர் மற்றும் பிற நிலத்தடி நீர் தேக்கி வைக்கவும், அதன்மூலம் சுற்றுப்புற மக்களுக்கு நல்லகுடிநீர் வழங்கவும் முடியும் என்கின்றனர். வெளிப்பார்வைக்கு குடிநீர் ஏரியாக மாற்றுவதுபோல் தோன்றினாலும் இதனால் ஏற்படும் பின்விளைவுகளைப் பற்றியும் சிந்திக்க வேண்டியுள்ளது.

இத்திட்டம் பற்றி, சூழலியல் ஆர்வலர்கள் சிலர் கேள்வி எழுப்புகின்றனர். கழுவெளி என்பதே கடலின் உப்புநீர் கலக்கும் இடமாகும். இது வங்காளவிரிகுடாக் கடல்பகுதியில் சுமார் 8 கி.மீ அகலமும், 28.5 கி.மீ நீளமும் கொண்டது. இதன் பரப்பளவு 73.5 ச.கி.மீ ஆகும். இந்தியாவில் இதுபோல 141 பகுதிகள் கண்டறியப்பட்டுள்ளன. கழுவெளி உலக அளவில் முக்கியமான பகுதியாகக் கருதப்படுகிறது. இங்கு 200 வகைப்பறவையினங்களும் வசிக்கின்றன. மேலும்வெளிநாட்டிலிருந்து 40,000 பறவைகள் வந்து செல்லும் இடமாகவும் உள்ளது. கடற்கரையை ஒட்டியுள்ள நிலப்பரப்பிலும் ஆயிரக்கணக்கான பறவைகள் இதனை நம்பியே வாழ்ந்து வருகின்றன. அவற்றில் பெரும்பான்மையானவை ஏற்கனவே அழியும் நிலையில்தான் உள்ளன என்று சர்வதேச இயற்கைப் பாதுகாப்புக் குழு குறிப்பிட்டுள்ளது. இந்தப்பகுதியில் நவம்பர் மாத வாக்கில் நன்னீர் கிடைக்கும் என்பதால் பல நீர்த்தாவரங்கள் பெருகிக் காணப்படும்.

மரக்காணம் நிலப்பகுதியில் கிடைக்கும் அதிக பட்ச மழைநீர் ஆண்டுக்கு சுமார் 40 டி.எம்.சி அளவில் இருக்கும். இவை இங்குள்ள ஏரிகளில் தேங்கி வழிந்து பிறகு கடலில் கலக்கும். 1916 ஆண்டிலிருந்தே நம்மை ஆட்சிசெய்த பிரிட்டிஷ் அரசுநிர்வாகம் இதைப் பராமரிக்க நடவடிக்கை எடுத்து வந்துள்ளது. பல இடங்களில் உடைந்து பயன்படுத்த முடியாத நிலையில் இருப்பதாலேயே தற்போது திட்டமிட்டு சீர்செய்யப்படுகிறது என்கின்றனர் பொதுப்பணித்துறை அதிகாரிகள். கடற்பகுதியும் நீர் வடிநீர் நிலங்களும் கலந்த இந்த இடம் பல சிற்றுயிரிகளின் வாழ்வாதாரமாகவும் உள்ளது. இங்கு அலையாத்தி மரங்கள் கடல்சேற்றில் வாழும் புற்கள், பாசிகள், சிப்பிகள், செம்மீன்கள் போன்றவை பல்கிப் பெருகிக்காணப்படும், தமிழ்நாடு அரசு 2022-ல் ஓர் உயர்மட்டக் குழுவை அமைத்து ஆராய்ந்தது. அது அளித்துள்ள அறிக்கைப்படி இந்தத் தடுப்பணை கட்டுவதால் கழுவெளியில் விபரீத மாற்றங்கள் ஏற்படும் என்றும், பல கடற்பறவைகள், கடல் ஆமைகள் மற்றும் அலையாத்திக்காடுகள் யாவும் பெரும் பாதிப்படையும் என்றும் தெரிய வருகிறது.

புதுப்பாக்கம் கிராமத்தில் வசிக்கும் மஞ்சநாதன் என்பவர் தங்கள் பகுதியில் நிலத்தடி நீர் பயன்படுத்த இயலாத நிலையில் உள்ளதாகத் தெரிவிக்கிறார்.

விழுப்புரம் மாவட்டத்தில் சில இடங்களில் இறால் வளர்ப்பு அதிக அளவில் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இவற்றுக்குப் பயன்படுத்தப்பட்டு, வெளியேற்றப்படும் நீரில் அதிக உப்புத் தன்மையுள்ள காரணத்தால் நிலத்தடி நீர் பாதிப்படைகிறது. தேசிய பசுமைத் தீர்ப்பாயம் இதனைக் கருத்தில் கொண்டு அதிகாரிகளுக்குப் பல அறிவுரைகளை வழங்கியுள்ளது.



எல்லம்மா என்கிற பெண்மணி கூறுவதாவது புதுப்பாக்கத்தில் எங்களுக்கு விவசாய நிலம் உள்ளது. ஆனால் அதைப் பயன்படுத்த முடியாத அளவுக்கு உப்புநீர் உள்ளது என்கிறார். கழுவெளிப்பகுதி, கிழக்குக் கடற்கரைச்சாலையிலிருந்து மிக அருகில் தென்படுகிறது. அங்கு குடியிருப்புக் கட்டுமான வேலைகளும் நடைபெறுகின்றன. இவற்றின் தாக்கம் உள்ளூர்வாசிகளைப் பெருமளவு பாதிக்கின்றன.

அரசு பல்துறை சார்ந்தவர்களுடன் கலந்து பேசி, சரியான நடவடிக்கைகளை விரைந்து மேற்கொள்ளவேண்டும். இந்த வகையில் தமிழ்நாடு அரசின் சுற்றுலாத்துறை செயலர் திருமிகு சுப்ரியா சாஹூ சில அத்தியாவசியத் திட்டங்களை ரூ.1675 கோடியில் நிறைவேற்ற அனுமதி பெற்றுள்ளார். நீலப் பசுமை முயற்சிகள் வெற்றிபெற வாழ்த்துவோம்.

தகவல் – டாக்டர் லட்சுமிநரசிம்மன்

கோயமுத்தூர்.

## வாசகர் குரல்

டிசம்பர் ஆரோவில் வாசித்த மகிழ்ச்சி. ஆசிரியர் பக்கத்தில் பெற்றோரின் எதிர்பார்ப்புகள் எதார்த்தமானவை. ஆலமரத்தின் வேரில் பாரசீகம்.நல்ல செய்தி. பாரதியின் தியானம் நாத்திகனுக்கும் உதவும். பக்கம் குறைவு மாதிரி உணர்ந்தேன்.

கவிஞர் பெ. சிதம்பரநாதன், கோவை.

வணக்கம்.தாங்கள் தொடர்ந்து அனுப்பி வரும் ஆரோவில் செய்தி மடலுக்கு நன்றி. இது நல்ல பணி ,சிறு சிறு மருத்துவக் குளிகைகள் போல எல்லா வகை வாசகர்களுக்கும் பயன் தரும் நல்ல செய்திகளை சிறு சிறு கட்டுரையாகவும் கவிதையாகவும் துணுக்குகளாகவும் செய்தித் துளிகளாகவும் பொன்மொழிகளாகவும் வெளியிட்டு வருகிறீர்கள்.என் பாராட்டுகள்.

குறிப்பாக 2023 அக்டோபர் இதழில் நீங்கள் எழுதியுள்ள ஓர் ஆளுமையின் பிரிவு என்னை மிகவும் கவர்ந்தது. இரங்கற் குறிப்பை நல்ல இலக்கியச் சுவையோடு எழுதியுள்ளீர்கள்.உங்களோடு நேரில் காலத்தின் பின் சென்று இலக்கிய ஆளுமையான கிருத்திகாவைப் பார்த்த உணர்வு ஏற்படுகிறது. வருணனை முறையும் எடுத்துரைப்பும் இனிய கவிதை மொழியும் உணர்ச்சிச் சுழிப்பும் நீங்கள் கவிஞர் என்பதைச் சொல்லாமற் சொல்கின்றன. நீங்கள் கண்ட இலக்கிய ஆளுமைகளையும் பிறவற்றையும் இவ்வாறே இளம் சிறார்க்கு ஏற்ற முறையில் தொடர்ந்து எழுதிப் புத்தக மாக வெளியிடுங்கள்.உங்கள் நற்பணிகள் கவிதைப்பணிகளுடன் தொடர்க. உங்கள் கவிதைக் கையிலிருந்து ஒரு நல்ல காவியமும் வெளிவருமா? வாழ்க வளமுடன்

முனைவர். கி.நாச்சிமுத்து

கோயமுத்தூர்.

வணக்கம் ஐந்து ஆரைச் சக்கரம் பொறித்த ஆரோவில் 24, சனவரி செய்திமடல் வந்தது. அதில் மாவீரர் நேதாஜியின் அட்டைப்படம் குல்லா இல்லாமல் இருந்த குறையோடு இருந்தது. நேரு, நேத்தாஜி,போன்றோர்க்குக் குல்லா மிகுந்த அடையாளத்தை தருவதாகும். ஆசிரியர் பக்க நூலரங்கத்தில் OLD IS GOLD என்பது தங்கப்பாவின் மொழிபெயர்ப்பிற்கு 2010ல் கவிதாயினியாம் கவிஞர் மீனாட்சி அவர்கள் தந்த சாற்றுக்கவி சரித்திரப் புகழ்க்குரியதாக இருந்தது. அதில் நிமிர்ச்சி, கிணுகிணுத்தார் என்ற சொற்கள் நல்ல சொல்லாட்சிகளாக ஆதிக்கம் செய்கின்றன. பிஞ்சுக் கடிதச் செய்தி நெஞ்சைத்தொட்டது. அதுவும் ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பாக இருந்தது. நன்றி. ஒரு மொழி அதே தாய்மொழியாக மட்டும் இல்லாமல் மற்றொரு மொழியில் பயணிக்க வேண்டும். அப்போதுதான் பாரதி சொன்னதுபோல் மொழிவளரும், பரவலாகப் புகழ்பெறும். இந்தக்கொள்கையைத் தொல்காப்பியர் “மொழிபெயர்த்து அதர்ப்படயாத்தல்”

எனக்கூறினார். தொலைநோக்கிய பார்வையின் சிறப்பில் ஜனவரி 24 செய்திமடல் தங்கத்தமிழ்பாவாகவே இருந்தது.

– தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி.

## கடிதாமுதத்துளி

கிராமப்புற நடுநிலைப்பள்ளியிலிருந்து நமது மையத்திற்கு வரும் விழுமியக்கல்வி மாணவர்கள் ஆரோவில் தகவல் மையம் பார்வையிட்டனர்.

அவர்களுடைய பதிவுகளிலிருந்து ஒரு துளி.

ஆரோவில் தகவல் மையத்திற்கு உள்ளே நாங்கள் போகும் பொழுது எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. அதற்குப்பிறகு நாங்கள் எல்லாரும் ஒரு அறைக்கு போனோம். அந்த அறையில் ஆரோவில் எப்படி உருவானது யார் உருவாக்கினார் என்று அதை பற்றி படம் பார்த்தோம். அதில் நிறைய விஷயம் புரிந்தது அறையை விட்டு வெளியே வந்துவிட்டோம். வெளியே வந்ததும் எல்லா இடத்தையும் பார்த்தோம் அதற்குப்பிறகு எனக்கு ஏதோ குழப்பமாக இருந்தது. அதற்குப் பிறகு நல்லா உணர்ந்து பார்த்தோம் நிறைய மக்கள் இருந்தார்கள். ஆரோவில் தகவல் மையத்தில் வரும் மக்கள் மனதில் ஏதாவது ஒன்று இருக்கும். என்னுடைய மனதில் மகாகவி சுப்பிரமணிய பாரதியார், ஸ்ரீமகான் அரவிந்தர், ஸ்ரீஅன்னை இவர்கள் எப்படி உருவாக்கியிருப்பார்கள் சமத்துவம்? என்பதும் இங்கே பலவகை மக்களின் நடமாட்டம் பார்த்ததும் சமத்துவம் உணர்ந்தேன்.

– பிரியதர்ஷினி
எட்டாம் வகுப்பு, ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, பெரியமுதலியார்சாவடி.



சிறுவர் இலக்கியம்

## அறிவோம் நம் தமிழ் - XII
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

**HEIGHT** – உயரம்
உயர்வு | உச்சநிலை
உயர்ந்த இடம் | தீவிர கட்டம்
தொலைவு | உச்சி
மேடு | ஏற்றம்
உச்ச அளவு | மேம்பாடு
உயர்தகுதி | இறை
சேடு | சேண்
நெடுமை | ஒழுகல்
ஒக்கம்
நிவப்பு

**HELP** – உதவு | பங்களி
ஊக்கமளி
(பொருள்) கொடு
(உணவு) பரிமாறு
(துன்பம்) தணி
பங்கிட்டு அளி
ஆதரவு
துணை
தீர்வு
பரிகாரம்
துணைமை.

நன்றி: ஆங்கில – தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.


## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.